ஓம்.
பரப்ரம்மணே நம:

# ஜீவான்மாவின் பரிமாணம்

இஃது

**"ஆரியன்"**

என்பவரால் எழுதப்பட்டு,

சென்னை:
**மதராஸ் ரிப்பன் அச்சியந்திரசாலையில்**
பதிப்பிக்கப்பட்டது.

1897ஸு செப்டம்பர்மீ

இதன்விலை அணா அரை

பத்துக்குத்தபால் கூலி அணா அரை.

ஓம்.
பரப்ரம்மணே நம:

# ஜீவான்மாவின் பரிமாணம்

1896ஹு அக்டோபர்மீ 16உ பிரசுரமான “விஜயத்துவஜம்” பத்திரிகை 4 வது புத்தகம் 9 வது இலக்கச் சஞ்சிகை 36 வது பக்கம் 3 வது காலத்தின்கண் “'உண்மைவிரும்பி” என்பர். றொருவர், “ஆன்மாவின் பரிமாணம் என்னை” ஒர் வினா விடுத்து, ஜீவன், அணு என்னும் கொள்கையினை மறுக்கின்றார். அது விஷயமாகச் சில பேசுவாம்.

'உண்மை விரும்பி' என்பவர், ஆரம்பத்தில் "சரீரத்தினகத்தே பொருந்தி யிருக் கும் சீவான்மா அணுப் பரிமாண முடைத் தென்று சில வாதிகள் சொல்கின்றனர்” என்று கூறுகின்றார். கூறுகின்றமையின், ஜீவான்மா அணு வென்பது பூர்வபக்ஷியார் க்குச் சம்மத மில்லையென்று விளங்குகின்றது. ‘சரீரத்தினகத்தே பொருந்தியிருக்கும் ஜீவான்மா' எனப் பூர்வபக்ஷியாரே சொல்லிவிட்டு, பின்னர் சிலவாதிகள் சொல்கின்ற னர்' என்று சொல்வது பொருத்தமாமோ? கூண்டினுள் இருக்கும் பறவை கூண்டினுள் அடங்கி யிருத்தலோடு அவ்வியாபகமாயும் ஏகதேசமாயும் இருத்தல்போன்று, சரீரத்தினுள் இருக்கும் சீவான்மா, சரீரத்திற்குள் அடங்கியும் ஏகதேசியாயும் இருக்கு மென்று சொல்வது குற்றமன்றே. இங்ஙனமாக, ‘அணுப்பரிமாண முடைத்தென்று சில வாதிகள் சொல்கின்றனர்' எனப் பிறர் பேரில் குற்றங் கூறுவது குணமாமோ? பிராணிதத்துவ சாஸ்திரிகள் அணுவளவு ஜீவ ஜந்துக்களு மிருக்கின்றன வெனக் கூறுகின்றார்கள். இப்படிப்பட்ட அணு ரூப சீவ ஜந்துக்குள் இருக்கும் சீவான்மாவை அணுவெனக் கூறாது வியாபகமெனக் கூறல் பொருந்துமா? பொருந்தா தென்பதற்குச் சாக்ஷி ‘சரீரத்தி னகத்தே பொருந்தியிருக்கும் ஜீவான்மா' என்னும் (‘உண்மை விரும்பி' யின்) வாக்கியமே போதியதாம். கூடு பரிமாண. முளதென்பது யாவர்க்கும் காட்சியளவை? அதனுள்ளிருக்கும் பறவையும் பரிமாண மென்ப தியாவர்க்கும் காட்சி யளவை. இங்ஙனமே சரீரம் பரிமான முளதென்பதும் யாவர்க்கும் காட்சி யளவை; இங்ஙனமாகச் சரீரத்தினுள் இருக்கும் சீவான்மா மாத்திரம் பரிமாண மன்றென வெங்ஙனங் கூறத்தகும்?

'சீவான்மா அணுப் பரிமாண முடைத்தென்று சில வாதிகள் சொல்லுகின்றனர் என்று கூறியது பொருந்தா தென்பதை இன்னும் விளக்கிக் காட்டுவாம். ஒவ்வொரு சீவர்க்கும் சரீரம் வேறு, சுக துக்கங்கள் வேறு, அபிமானம் வேறு, எண்ணங்கள் வேறு, கருமங்கள் வேறு, புண்ணிய பாவங்கள் வேறு, நான் நீ யென்கிற விவகாரம் வேறு, இவ்வாறு யாவும் வேறா யிருத்தலால் சீவான்மாக்கள் வியாபகமென்று எவ்வாறு சொல்லத்தகும்? இவர் ஜீவான்மா வியாபகமென்று சொல்வதோடு அதைப் பல வென்று சொல்லுகின்றாரா? ஒன்றென்று சொல்லுகின்றாரா? பலவென்று சொல் லுகின்றா ரென்னின், எந்தச் சரீரம் நம்முடையது? எல்லாச் சரீரங்களிலும் எல்லாச் சீவான்மாக்களும் வியாபகமா யிருத்தலின் இதுதான் எனது சரீரமென்று கூறுதல் கூடாது. இது எனது சரீரம், இது அவனது சரீர மன்று, அது அவனது சரீரம், அது

எனது சரீரமன்று எனப் பேதங் காணப்படுவது யாவர்க்கும் அனுபவம். எனது சரீரத்துக்கு நோயுண்டாய், அதனால் யான் வருந்தும்போது, பிறனுக்கு அந்நோ யுண்டாய், அவன் வருந்துகின்றா னில்லை. பிறனுக்கு நோயுண்டாய் அவன் வருந்துங்கால் எனக்கு அந்நோயுண்டாய் யான் வருந்துவதில்லை.

இனி அந்தக்கரணங் காரணமாகப் பேதங் காணப்படுகின்றது, மற்றப்படிச் சீவான்மா வியாபகந்தானெனின், இதுவும் பொருத்தமுடைய தன்று; எல்லாச் சரீரங்களிலு முள்ள எல்லா அந்தக் கரணங்களிலும் சீவான்மா வியாபகமுடை மையா னென்க. வியாபகமுள்ள சீவான்பா, ஒரு சரீரத்தை மாத்திரம் எனது சரீமென்று எங்ஙனஞ் சொல்லப்படாதோ, அங்கனமே ஒரு அந்தக்கரணத்தை மாத்திரம் எனது அந்தக்கரண மென்றுஞ் சொல்லுதல் கூடாது; கூடாதாகவே, எல்லாச் சரீரங்களிலு முள்ள எல்லா அந்தக் கரணங்களையும் எனது அந்தக் கரணங்க ளென்று சொல்லுதல் வேண்டும். இது அனுபவ விரோதம்; எல்லா அந்தக்கரண அனுபவங்களும் ஒரு சீவான்மாவுக் கிலாமையயா னென்க. இனிச் சீவான்மாவைப் பல வென்று சொல்லும் பக்ஷத்தில் வியாபகமென்று சொல்லுதல் கூடாது. ஒரு பொருள் வியாபகமா யிருக்கின், அதில் பிறிதொரு பொருளிருத்தல் கூடாது. கை வைத்த விடத்தில் கால் வைக்க முடியாமை போல, ஒரு சீவான்மா விருக்குமிடத்துப் பிறிதொரு சீவான்மா விருத்தல் ஏலாது; பிறிதொன்றே யிருத்த லேலாதபோது கோடாகோடி சீவான்மாக்களிருத்தல் எலுமா? எலாது! ஏலாது!! இனி ஒன்றென்று சொல்லுகின்றாரெனின், இதுவும் பொருந்தாது; என்னை? சுகதுக்கம், புண்ணியபாவம், கருமம், அபிமானம், நான் நீ யென்னும் விவகாரம் முதலியன வேறா யிருத்தவி னென்க.

சீவான்மா வியாபகமாயின் சரீரத்தினுள் வியாபகமா? சரீரத்தின் வெளியிலும் வியாபகமா? சரீரத்தினுள் வியாபக மென்னின், எந்தச் சரீரத்தினுள் வியாபகம்? யானையின் சரீரம் மிகப் பெரியது! எறும்பின் சரீரம் மிகச் சிறியது. இவ்விரண் டினுள் எதில் வியாபகம்! யானைச் சரீரத்தினுள் வியாபகமெனின், எறும்புச் சரீரம் எடுக்கும்போது உள்ள வியாபகங் குறைந்து அவ்வியாபகமாய்விடும். எறும்புச் சரீரத்தினுள் வியாபகமெனின், யானைச் சரீரமெடுக்குங்கால் எறும்புச் சரீரத்தி லிருந்த அவ்வியாபகத்துவங் கெட்டு, வியாபகமாகவேண்டும். சரீரத்துக் கியைந்த வியாபக அவ்வியாபகங்களாகு மாயின், குழந்தைச் சரீரத்தினுள் ளிருக்கும் ஜீவான்மா, குழந்தை வளர வளர, அதுவும் வளரும்; வியாதி முதலியவற்றால் சரீரம் சுருங்கச் சுருங்க, ஜீவான்மாவும் சுருங்கும். சீவான்மா வளர்தல் குறைதலான மாறுதலடையும் போது, அதைச் சீவான்மாவாகிய நாம் அறிதல் வேண்டும். அவ்வாறு அறிந்த அனுபவம் நமக்கில்லை. சீவான்மா. வளர்தல் குறைதலான மாறு பாட்டினை யடைந்தாலும் அடையட்டும். எது வளர்தல் சுருங்குதல்களான மாறுபாட்டினைப் பெற்றதோ, அது சடத்துவமும், நாசத்துவமும், அநித்தியத்து வமும், அசத்தியத்துவமும், ஆதித்துவமு முடையதா மென்க.

சரீரத்தின் வெளியிலும் வியாபகமெனின் இதர தேச இதர சரீர சங்கதிகளெல் லாவற்றையும் அறிதல்வேண்டும். அங்ஙனமாயின், ஆள் தபாலேதுக்கு? கடித தபாலேதுக்கு? தந்தித் தபரலேதுக்கு? புகைவண்டி ஏதுக்கு? புகைக்கப்பலேதுக்கு?

ஆகாய விமானங்களேதுக்கு? மாட்டுவண்டி குதிரை வண்டிகள் ஏதுக்கு? ஒற்றர் தூதர்க ளேதுக்கு? சொர்க்க நரகங்களேதுக்கு?. ஆசிரியன் எதுக்கு? மாணாக்கன் எதுக்கு? மேற்சொல்லிய விடங்களிலெல்லாம் அவனது சீவான்மா இல்லாமற் போனாலன்றா அவ்வளவு சாதனங்களும் அத்தியாயவசியகமாய் வேண்டற்பாலன? நியாய ஸ்தலத்தில் நியாயாதிபதிகள் வாதிப் பிரதிவாதிகளை விசாரிக்குங்கால் சாட்சிகள் எதுக்கு? வாதிப் பிரதிவாதிகளுடைய சரீரங்களுள்ளே நியாயாதிபதி களுடை சீவான்மாக்கள் இராமற்போனாலன்றா சாட்சிகளைத் தேடவேண்டுவது?

எந்தக் கருமத்தினால் எந்தச் சரீர முண்டாயிற்றே, அந்தச் சரீரந்தான் அந்தச் சீவனுக்கு உரியதென்னின், இதுவும் பொருந்தாது. ஏனெனின் எந்தச் சரீரத்தால் கருமஞ் செய்யப்பட்டதோ, அந்தக் கருமத்தைச் செய்தவனுடைய முன் ஜன்ம சரீரத்திலும் சகல சீவான்மாக்களு மிருப்பதா லென்க. இங்ஙனமாக ஒரு சீவான்மா வுக்கே ஷெ சரீர முரிமையென எங்ஙனம் கூறலாம்? இதுபோக, முன் ஜன்மத்தில் கருமஞ் செய்யப்பட்ட பல சரீரங்களிலும் பல சீவான்மாக்களும் வியாபித் திருக்கின்றன; அவற்றில் எந்தச் சரீரம் எந்த சீவான்மாவுக்குச் சொந்தம்? எல்லாச் சீவான்மாக்களுக்கும் எல்லாச் சரீரமும் சொந்தமாகும். இதனால் எல்லாக் கருமங்களையும் எல்லா ஆன்மாக்களுமே செய்தனவென்றும், கருமங்களில் பேதஞ் சொல்லப்படாதென்றும் ஏற்படுகின்றன.

எந்தச் சீவான்மா: எந்தச் சரீரம், எந்த மனதுடனே கூடி யிருக்கின்றதோ, அந்தச் சீவான்மாவுக்கு, அந்த மனதுடனே கூடிய சரீரம் சொந்தம் எனின், சகல சரீரங்களிலுமுள்ள சகல மனங்களிலும் சகல சீவான்மாக்கள் வியாபித் திருக்கின்ற மையின், இன்ன சீவான்மாவுக்கு இன்ன சரீரத்திலுள்ள இன்ன மனந்தான் சொந்த மென்று சொல்லப்படாது.

இனி எந்தச் சீவான்மாவுக்கு எந்தச் சரீரத்தில் நானென்ற அபிமான மிருக்கின் றதோ, அந்தச் சரீரமே அந்தச் சீவான்மாவுக்குச் சொந்தமெனின், எல்லாச் சீவான்மாக்களும் எல்லாச் சரீரங்களிலும் வியாபித்திருப்பதால் எந்தச் சீவான்மா எந்தச் சரீரத்தை நானென் றபிமானிப்பது? ஒரு கிராமத்திலுள்ள எல்லா வீடுகளும் அக்கிராமத்திலுள்ள யாவருக்குமே சொந்தமாயின், அவ்வீடுக ளெல்லாவற்றையும் எல்லோருமே எனது வீடு, எனது வீடு என்று சொல்வார்கள். அவருள் ஒருவனைச் சுட்டி, "உனது வீடு எது?" என்று கேட்கின், ஒன்றை மாத்திரம் சுட்டி, "இதுமாத்திரம் எனது வீடு" என்று சொல்லமாட்டான்; "யாவுமே எனது வீடுகள்" என்று சொல்லு வான். அதோடு ஒவ்வொருவரும் அவ்வாறே சொல்லுவார்கள். அவருள் எவனும் ஒரு வீட்டைமாத்திரம் சுட்டி எனது வீடு என்று சொல்லி அபிமானிக்கமாட்டான். அவ்வாறே யொவ்வொரு சீவான்மாவும் வியாபகமாயிருக்கும்பக்ஷத்தில், ஒருவனும் ஒரு சரீரத்தைமாத்திரம் நான் என்றும், எனது என்றும் அபிமானித்துச் சொல்ல மாட்டான். பிரத்தியட்சத்தில் ஒவ்வொருவனும் தனக்கு மாத்திரம் சொந்தமாயுள்ள வொவ்வொரு சரீரத்தை மாத்திரம் நான் எனது என்றபிமானிக்கின்றமையின், சீவான்மா வியாபகமென்று சொல்வது பொருந்தாது.

## ஜீவான்மாவின் பரிமாணம்

ஆட்டுக்குப் புலி, எலிக்குப் பூனை, பாம்புக்குக் கீரி, யானைக்குச் சிங்கம் முதலியன இயற்கை சத்துருக்களா யிருக்கின்றன; செயற்கைச் சத்துருக்களாயிருக் கின்ற சீவன்களும் பல் விருக்கின்றன. இது தவிர, நட்பாயுள்ள சீவன்களும் சில சமயங்களில் நட்பைவிட்டுப் பகைக்கின்றன. சீவான்மாக்கள் வியாபகமாய்ப் பல சரீரங்களிலும் இருக்குமாயின், பகை வரவேண்டிய ஆவசியகம் ஏதுக்கு?

திருடர்கள், சொத்துக்களைத் திருடிக்கொண்டு போய் ஒளித்துக்கொள்ள, இராசாங்க சேவகர்கள் அவர்களைத் தேடித் திரிந்து அலைகின்றார்கள். எவ்வளவு அலைந்து திரிந்தாலும் சில திருடர்கள் அகப்படுவதேயில்லை. சில திருடர்கள் யோக்கியர்கள் போலவே சமீபத்திலே யிருந்து கொண்டு, திருடாதவர்கள் போலவே பகட்டுச்செய்கிறார்கள். சில திருடர்களும் கொலையாளிகளும் இன்னும் பல கொடிய கிருத்தியஞ் செய்தவர்களும் அகப்படாமையி னிமித்தம், அரசினர் அவர்களைப் பிடித்துக் கொடுப்பவர்களுக்கு இவ்வளவு பணம் இனாம் அளிக்கப்படு மென்று பத்திரிகைகளில் விளம்பரஞ் செய்கின்றார்கள். சிலசமயங் குற்றஞ்செய்யாதவர்கள் தண்டிக்கப்பட்டு, குற்றஞ் செய்தவர்கள் தப்பித்துக் கொள்ளுகின்றார்கள். சில சமயம் பெருங் கொள்ளையும் கலகமும் நடக்கிற காலங்களில் ஷை குற்றம் புரிந்தவர்கள் இன்னாரெனப் புலப்படாது, கண்டபேர்களை யெல்லாம் பிடித்துத் தண்டித்து விடுகிறார்கள் சீவான்மா வியாட்கமாயிருப்ப துன்மையாயின், திருடர் முதலியவர் களுடைய சரீரங்களிலு மிருந்து குற்றவாளிகளை ஐயமறத் தெரிந்து பிடித்துத் தண்டித்துவிடலாமே. அவ்வாறு செய்யாமைக்குக் காரணம் யாது? இதனாலும் சீவான்மா வியாபக டிறெனப் புலப்படுகின்ற தென்றறிக.

ஜீவான்மா வியாபகமா யிருக்குமாயின், அது மோக்ஷத்திலும் நரகத்திலு மிருப்பதோடு மோக்ஷத்தி லிருக்குங் காலத்திலேயே நரகத்திலும், நரகத்தி லிருக்குங் காலத்திலேயே மோக்ஷத்திலும் இருக்கு மென்பது நிச்சயம். வியாபகமா யிருக்கும் ஆகாயத்தை அவ்வியாபகப் படுத்தி ஒரு இடத்தில் மாத்திர மிருக்கச் செய்வது கூடாத காரியம்; அங்ஙனமே வியாபகமா யிருக்கும் ஜீவான்மாவை அவ்வியாபகப் படுத்தி மோட்சத்தில் மாத்திர மாயினும் நரகத்தில் மாத்திரமாயினும் இருக்கச் செய்வது கூடாத காரியம். ஆகவே, நரகப் பிராப்தி அடையா திருக்குமாறு நிஷேத கர்ம்வத்தைச் செய்யாதே; மோட்சத்தைப் பெறுமாறு விதித்த கர்ம்மங்களையே செய் யென்று நூல்கள் கூறுவது வீணா மென்க.. சீவான்மா வியாபக மென்று சொல்வதி னாலேயே எந்த நற் கருமத்தைச் செய்தாலும், தீய கருமத்தைச் செய்தாலும், நற் கரும் தீய கருமங்களைச் செய்யா விட்டாலும் மோட்ச நரகங்க ளிரண்டிலு மிருத்தல் நிச்சயமா யிருக்க, அவ்வா றில்லாதது போல வைத்து, என் விதி நிஷேதங்களை நூல்கள் நுவலவேண்டும்? இதற்குச் சரியாகத் திருநெல்வேலி பொன்னைமா நகரம் ஸ்ரீ கவிராஜ அழகிய நம்பியா பிள்ளை அவர்கள் குமாரர் ஸ்ரீஆரியங்காவுப் பிள்ளை அவர்க ளியற்றியச்சிடுவித்த "பெரியர் அற்புதத் திரட்டு" "சைவ சித்தாந்த நவநீதம்" என்னும் நூலில

"ஆன்மாக்கள் எங்கும் வியாபகரா யிருக்க எவ்வாறு சரீரத்தைப் பற்றுவர்"

என்ற கேள்வி கேட்டு, அதற்குத்தரம்

"படிக மலையானது எந்தப் புறத்தில் வன்னத்தைக் கொடுத்தாலும் பற்றிக் கொள்வது போல எல்லாப் புவனங்களிலும் வியாபகராக விருக்கும் ஆன்மாக்கள், கடவுள் எந்தப் புவனத்திலே சரீரத்தைக் கொடுத்தாலும் பற்றிக் கொள்வர்"

என எழுதப்பட் டிருக்கின்றது. இதனால் சீவான்மாக்கள் சகல உலகங்களிலும் மோட்ச நரகங்களிலும் நிறைந்திருக்கின்றார்க ளென்பது சீவான்மாவுக்கு வியாபகம் சொல்பவர் பட்சமா மென்க. ஷை நூலாசிரியர், இவ்விஷயத்தில் ஏதும் ஆசங்கை தோன்றா வண்ணம் போதல் வருத லில்லாத சீவான்மாக்களின் நல்வினை தீவினைகட் கியைய அவ்வவ் வுலகங்களில் கடவுள் சரீரத்தைக் கொண்டுபோய்க் கொடுத்து விடுவார் என்றார். இதனால் மற்றவரிலும் இவர் சற்றுப் புத்தி நுட்ப முள்ளவர் தான். சீவான்மாக்களின் போதல்வருதலாதித் தொழில் விகாரத்தைக் கடவுளுக்குக் கொடுத்து விட்டார்; போக்கும் வரவும் புணர்வு மிலாக் கடவுளுடைய நிஷ்கிரிய நிர்விகாரத்தை ஜீவர்களுக்குக் கொடுத்து விட்டார். சீவான்மாக்களை வியாபகரென்று சொல்லும் நிமித்தம் ஒருவரது இலக்கணத்தை மற்றவர்க்கு ஈந்து விட்டார் போலும்.

சீவான்மாக்கள் வியாபகரெனச் சொல்லுங் காரணத்தால், அவர்கள் எப்போதும் மோட்ச நரகங்களிலு மிருப்பார்களென்று சொல்லவே, இது காறும் சென்று போன இறந்தகால சிருட்டிகளிலும், இந் நிகழ்கால சிருட்டியிலும் ஒரு சீவான்மா வேனும் நரக சம்பந்த மில்லாத பரிசுத்த மோட்சத்தை மாத்திரம் அடைந்ததாகவும், மோட்ச சம்பந்த மில்லாத அபரிசுத்த நரகத்தைமாத்திரம் அடைந்ததாகவும் சொல்லுதல் கூடாது; கூடாதாகவே, இப்போது மோட்சத்தி லிருப்பவரென்ச் சொல்லப்படுகிறவர் நரகத்திலும், நரகத்திலிருப்பவரென்ச்'சொல்லப்படுகிறவர் மோட்சத்திலும் இருக்கிறார்க ளென்றே சொல்லவேண்டும்; அது மாத்திரமா, மோட்ச நரக மல்லா இவ்வுலகத் திலிருக்கிறவரும் ஷை இரண்டு ஸ்தானங்களிலுமிருக்கிறவர்களென்றே சொல்ல வேண்டும். இதனால் இப்போ திங்குள்ள நாமும் இவ்விடத்திருப்பதோடு மோட்ச நரகத்திலு மிருக்கின்றோமென்றாகின்றது. மோட்சத்திலும் நரகத்திலும் இவ்வுலகிலு முள்ள எல்லாச் சீவர்களும் எப்போதும் எங்குமே யிருப்ப துண்மையானால், இவ்வுல கத்தை விட்டு நரகத்திற் செல்லாமலும் மோட்சத்தில் மாத்திரம் செல்லவும் நூல்களில் சொல்லிய வண்ணம் சாதனங்கள் இயற்ற வேண்டுவ தியாதுக்கு? ஷை சாதனங்களால் பயன்யாதோ? இது விழலுக்கு முத்துலைபோட் டிறைப்பதுபோ லன்று?

இனிச் சீவான்மா அணுவென்று சொல்வதால் சில குற்றங்க ணிகழ்வதாய்த் தீட்டுகின்றார். அது விஷயமாகப் பூர்வ பக்ஷியார் "அணு வென்பது அதி நுண்ணி தாகிய ஓர் உருவப் பொருளாதலின், ஆன்மாவும் அது போல உருவப் பொருளென்று கொள்ளல் வேண்டும். அங்ஙனங் கொள்ளின், உருவப் பொருளெல்லாம் அருவப் பொருளின் தூலபரிணாமமாயும், தோற்றமொடுக்க முறுவதாயும், சடமாயுங் காணப் படுதலால் அவை போல் வதொன்றென்று கருதிக் கழிக்கப்படும்" என்று பேசுகின்றார். அணு: அதி நுண்ணியதாகிய உருவப் பொரு ளென்பது நமது காட்சிப் பிரமாணந்தான். இதனால் அணுவென்ப தெல்லாம் உருவாயே யிருக்க வேண்டுமென்ப தென்னை? அங்ஙனமாயின் மகத்தும் உருவப் பொருளா யிருப்பது காட்சிப் பிரமாணம் பற்றி,

மகத்தாயிருக்கும் ஆகாயத்தையும் கடவுளையும் உருவப் பொருளென்று சொல்வார் கொல்லோ! அதோடு சீவான்மாவையும் வியாபக மென இவர் கொள்வதால் அதையும் உருவப் பொருளென்று சொல்வார் கொல்லோ! 'உருவப் பொரு ளெல்லாம் அருவப் பொருளின் தூல பரிணாமமாயும், தோற்ற மொடுக்க முறுவதாயும் சடமாயுங் காணப்படுவதால்' என்றதால், அருவப் பொருளெல்லாம் தோற்ற மொடுக்க மற்றனவாயும் சித்தாயும் காணப்படுகின்றன வென்றாகின்றது. அங்ஙன மாயின், ஆகாய வாயுக்களைத் தோற்ற மொடுக்க மற்றன வென்றும், சித்தென்றுங் கொள்வார் போலும்.

இதி லின்னொரு விஷயம் வருமாறு: - 'உருவப் பொருளெல்லாம் அருவப் பொருளின் தூல பரிணாமமாயும்' என்பதில் பரிணமித்தல் எவ்வாறு? பால் தயிர்போலா? மண் குடம்போலா? கயிறு அரவுபோலா? பால் தயிர் போலென்னின், பால் கெட்டுத் தயிராவது போல், அருவங் கெட்டு உருவமாதல் வேண்டும்; அதோடு தயிர் மீண்டும் பாலாகாமை போல, உருவம் மீண்டும் அருவ மாகாது. அருவங் கெடாது உருவமாகு மென்னின், அருவம் அருவப்பிரகார மிருந்தால், உருவமாத லெங்ஙனம்? இவ்வித ஆக்ஷேபமிருக்கின்றமையின், அருவ முருவ மாதல் ஒருவாற்றானும் பொருந் திலது. மண் குடமாவது போல அருவம் உருவமாகின்ற தெனின், இதில் மண் உண்மை, குடம் பொய்; இது போல அருவம் உண்மை, உருவம் பொய்யாகின்றது. கயிறு அரவுபோ லென்னின், இதில் கயிறு அரவாய்ப் பரிணமித் தல் உண்மை யன்று; தோற்றல் மாத்திரமாம். இவ்வாறே அருவம் உருவமாதல் உண்மை யன்று, தோற்றல் மாத்திரமாம்.

'உருவப் பொருளெல்லாம் அருவப் பொருளின் தூல பரிணாமமாயும்' என்பதில், அருவப் பொருள் சூட்சுமமும், உருவம் பொருள் ஸ்தூலமுமாகின்றன. சூட்சுமம் ஸ்தூலமாத லெவ்வாறு? வித்தின்கண் விருட்சம் சூட்சுமித்து அரூபமாய் அடங்கி யிருந்து ஸ்தூல மாகின்றதுபோ லென்னின், இதில் சூட்சுமம் ஸ்தூலமாத லின்று. காரணமான ஸ்தூலமே ஒருவித மாறுதலோடுங் கூடி ஸ்தூலமாகின்றது. சூட்சுமமே ஸ்தூலமாகிற தென்னின், அப்போது ஸ்தூலமா யிருக்கும் வித்து ஸ்தூலமாகவே யிருக்க, அதிலுள்ள சூட்சுமம் ஸ்தூலமாக வேண்டும். அங்ஙன மின்று. ஸ்தூலமா யிருக்கும் வித்துக் கெட்டே ஸ்தூல விருட்சமாகின்றது. அந்த ஸ்தூல வித்தோடு ஸ்தூலமான நீர் முதலியன சேர்ந்தே ஸ்தூல விருட்ச மாகின்றது. ஆனால் அந்த ஸ்தூல வித்தி னிடத்து விருட்சமாகும் சத்தி யுண்டு; அது பொருளன்று, குணம். அந்தச் சத்தியினாலே தான் காரியத்தில் விசித்திரபேத முண்டாகின்றது. அந்தச் சத்தி பிரத்தியட்ச மன்று, அப்பிரத்தி யட்சமாம். அந்தச் சத்தி காரணத்தில் மாத்திரம் இருப்ப தன்று, காரியத்திலு மிருப்பதே சத்தி சூட்சும மென்று சொல்லி, அது ஸ்தூலமாய் விருட்சமாகின்ற தென்னின், இது கூடாது. ஏனெனின், அந்தச் சத்தி என்றும் ஸ்தூலமாவதில்லை; சூட்சுமமாகவே யிருக்கின்றது. ஸ்தூல மாகின்ற தாயின், அப்போது காரியத்திலும் புலப்பட வேண்டும். காரியத்திலும் சத்தி புலப்படாமல் அப்பிரத்தி யட்சமாகவே யிருத்தல் கண் கூடு, எங்ஙன மென்னின், காரியமான் விருட்சத்தில் வித்துண்டாய் அவ்வித்திலும் கண்ணுக்குப் புலப்படாமல் சத்தி அடங்கி யிருத்தலேயாம். இதில் மாத்திரமன்று, எந்தப் பொருளிலும் காரிய முண்டாதற் கேதுவான சத்தி புலப்படாமல் மறைந்தே யிருக்கின்றது. அது பொரு

என்று, குணமென முன்னரே கூறினாம். அந்தக் குணம் என்றும் சூட்சுமமாகவே யிருக்கும்; ஒரு போதும் ஸ்தூலமாவதில்லை. சூட்சுமம் ஸ்தூலமாவதைப்பற்றிப் பின்னும் ஆராய்வாம். சூட்சுமம் ஸ்தூல மாகிற போது சூட்சமங் கெட்டு ஸ்தூலமாகிறதா? சூட்சுமங் கெடாது ஸ்தூல மாகிறதா? சூட்சுமங் கெட்டு ஸ்தூலமாகிற தெனின் அப்போது சூட்சும மில்லாமற் போகிறது. இஃதுண்மையன்று, வித்தின் காரியமான விருட்சத்தின் பழத்திலுள்ள வித்தின்கண், மீண்டும் விருட்ச முண்டாதற் கேதுவான அப்பிரத்தியட்ச சத்தி யிருக்கக் காண்கின்றோம். ஆதலால் சூட்சுமத்தி லிருந்து ஸ்தூல முண்டாவதாய்ச் சொல்லப் படாது; ஸ்தாலத்தி லிருந்து ஸ்தூல முண்டாவதாகவே சொல்ல வேண்டும். இது நமக்கு என்றும் பிரத்தியட்ச அனுபவமாயிருக்கின்றது. சூட்சுமங் கெடாது ஸ்தூலமாகின்ற தெனின், சூட்சுமம் சூட்சுமமாகவே யிருக்குமாயின் ஸ்தூல மாவ தெங்ஙனம்? ஒன்று கெடாது மற்றொன்றாவது அதாவது காரணங் கெடாது காரியமாவது விவர்த்த வாதத்திற் கூடும். கயிறு கெடாது அரவாவது போலவும், கிளிஞ்சல் கெடாது வெள்ளியாவது போலவுமாம். இந்த வுபமானத்தின்படி பார்த்தால். அருவத்தி லிருந்து உருவ முண்டாக வில்லை யென்றே சொல்ல வேண்டும்.

'உருவப் பொரு ளெல்லாம் சடமாய்க் காணப்படுதலால்' அருவப் பொருளெல்லாம் சித்தாய்க் காணப்படுகின்றன வென்றாகின்றது. அங்ஙனமாயின், ஆகாயமும் வாயுவும் அருவமா யிருந்தும் சித்தாய்க் காணப்படாது சடமாய்க் காணப்படுதற்குக் காரண மென்னையோ!

இனி மற்றொரு விஷயத்தினைப் பற்றி விசாரிப்பாம். "ஈண்டுச் சரீரத்தி னகத்து வாழும் ஆன்மா அறிவுடைப் பொருளென்று அனுமான அளவைகொண்டு அறியப் படுதலால், அதற்கு மாருகிய அவர் கூற்றுப் பொருந்துமா றெங்ஙனோ?" என்றார். அறிவுடைப் பொருளென்று அநுமான அளவைகொண்டு எங்ஙனம் அறியப் படுகின்றதோ, அங்ஙனமே. சரீரத்தின் உள்ளடங்கி வாழ்வதினாலும், சரீரத்தை விட்டுப் பிரிந்து போவதினாலும், சரீரத்துக்குப் புறம்பான சரீரங்களில் நமது அறிவி ல்லாமையினாலும், தன் சரீரத்தை மாத்திரம் நான் எனதென் றபிமானிப்பதினாலும், அணுவளவு சரீரமுள்ள பிராணிகளுள்ளு மிருப்பதினாலும், இன்னும் முன் பேசிய பல ஹேதுக்களாலும் சீவான்மா அவ்லியாபக ஏகதேச அணுப்பொருளென அனுமா னிக்கப்படுகின்ற தென்க.

ஜீவான்மா முன் பின் வியாபக மென்றும், இடையில் ஆணவ மலத்தால் கட்டுப் பட்டு அணு வாயிற் றென்றும் சொல்லும் மதமும் “பதி பசு பாச வாதம்'” என்னும் நூலில் 26, 27, 28 வது பக்கங்களில் "ஜீவான்மா வியாபக மென்பது குற்றம்" "வியாபகமான ஆன்மா அணுவாகாது” என்னும் விஷயங்களில் மறுக்கப்பட்ட தென்க.

# ஜீவான்மாவின் பரிமாணம்

**திருமந்திரம் ஜீவன்.**

*மேவியசீவன்வடிவதுசொல்லிடில்*
*கோவின்மயிரொன்றுநூறுடன்கூறிட்டு*
*மேவியகூறதுவாயிரமாயினால்*
*ஆவியின்கூறுநூறாயிரத்தொன்று.* (1)

**முற்றிற்று.**

"தத்துவவாதி" என்பவர் நாகை ஸஜ்ஜனபத்திரிகையில் எழுதியவாறு

**மதராசு ரிப்பன் அச்சுக்கூடத்தில் பதிப்பிக்கப்பட்டது.**

| | |
|---|---|
| இதன்விலை அணா அரை | பத்துக்குத்தபால் கூலி அணா அரை. |

**1897ஹு செப்டம்பர்மீ**

.